30th June 1962]

(இ) The Revenue Divisional Officer, Devakottai, Sri Fakir Ahmed has been retained in the same division for more than three years for administrative reasons. He has since been transferred from that division.

**திரு. சா. கணேசன் :** இரண்டு முறைகள் மாற்றப்பட்டு அந்த மாற்றுதல் ஆர்டர் மறுபடியும் கான்சல் செய்யப்பட்டு அங்கேயே கிட்டத்தட்ட 4½ ஆண்டுகள் பதவி வகித்தாரே, அதற்குக் காரணம் என்ன ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** அதற்குக் காரணம் நான் சொன்ன பதிலிலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'அட்மினிஸ்ட்ரேடிவ் ரீசனு'க்காக முடிவு செய்யப்பட்டது. நிர்வாகத்தில் அவசியம் ஏற்பட்டால் அம்மாதிரி நடக்கும்.

*Full Finance Scheme (report)*

*55 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Co-operation be pleased to place on the Table of the House a copy of the report of the Full Finance Scheme Committee, together with a statement of action taken on the recommendations of the Committee?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : The report of the Full Finance Scheme Committee is under consideration. The suggestion to place on the Table of the House a copy of the report together with a statement of action taken on the recommendations contained therein will be considered as soon as the Government have taken decisions on the recommendations.

**திரு. மீ. கலியாணசுந்தரம் :** இந்த அறிக்கை அரசாங்கத்திற்கு சமர்ப்பிக்கப்பட்டு ஒரு ஆண்டுக்கு மேல் ஆகிறது. இன்னும் பரிசீலனையில் இருக்கிறதா ? அரசாங்கம் இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லையா ? அப்படியென்றால் ஒரு முடிவுக்கு வர எத்தனை ஆண்டுகள் ஆகும் என்று தெரியவில்லை. ஆகையால் இந்த அறிக்கையையாவது இந்தச் சபையில் வரக்கூடிய கூட்டுறவு மான்யம் வரும்போது வைக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்றாடியார் :** இதற்கு ஒரு கமிட்டி போடப்பட்டு அந்தக் கமிட்டி பரிசீலனை செய்தது. கூடியவரையில் ரிபோர்ட்டை வைக்கும்படியான நிலை ஏற்பட்டுவிடும். இன்னும் ஒருசில 'ரெகமென்டேஷன்கள்' பார்க்க வேண்டியிருக்கிறது.

**லோகல் பண்டு டிஸ்பென்ஸரி (ஆமூர்)**

*** 56 கேள்வி.—திரு. மு. கருணாநிதி :** கனம் சுகாதார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நாகை தாலுக்கா ஆமூர் கிராமத்தில் 'லோகல் பண்டு டிஸ்பென்சரி'-யில் இரண்டு வருடமாக டாக்டர் இல்லாமலிருப்பது சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா ?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : No, Sir. The dispensary vested in the Thanjavur District Board formerly and it now vests in the Tiruvarur Panchayat Union.

திரு. மு. கருணாநிதி: அங்கே டாக்டர்கள் இல்லையென்று அரசாங்கத்திற்கு மனுக்கள் அனுப்பப்பட்டன. அவைகள் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்படவில்லையா? பல முறை மனுக்கள் அனுப்பியும் வரவில்லையென்று சொல்வதால் அந்தப் பகுதியிலுள்ள மக்கள் திருப்தி அடைவார்கள் என்று சர்க்கார் கருதுகிறதா என்று அறிய விரும்புகிறேன்.

கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம்: இம்மாதிரி மனுக்கள் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டன. ஒரு எல்.ஐ.எம். டாக்டருக்கு 'அப்பாயின்ட்மெண்ட்' உத்தரவு போடப்பட்டது. ஆனால் அந்த டாக்டர் அதை ஏற்றுக்கொள்ளவில்லை.

திரு. மு. கருணாநிதி: அப்படி அப்பாயின்ட் செய்யப்பட்ட டாக்டர் அந்த அப்பாயின்ட்மெண்டை ஏற்றுக்கொள்ளாததற்கு என்ன காரணம் என்பதை அறிவிக்க முடியுமா? அதன் காரணம், சம்பளத்தைப் பொறுத்த விஷயமா என்பதையும் அறிய விரும்புகிறேன்.

கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம்: அவர் அதை ஏற்றுக் கொள்ளாததற்குக் காரணம் என்ன என்ற தகவல் இது வரையிலும் கிடைக்கவில்லை. இருந்தபோதிலும் மெடிகல் ஆபீசர்களுக்கு சம்பளத்தை உயர்த்துவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப்பட்டு அதற்கும் திட்டமிட்டிருக்கிறார்கள்.

*Major town panchayats*

* 57 *Q*.—SRI V. KRISHNAMOORTHY: Will the Hon. the Minister for Municipal Administration be pleased to state whether the Government have decided to convert the major town panchayats into municipalities?

THE HON. SRI M. S. A. MAJID: No, Sir.

திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி: கனம் சபாநாயகர் அவர்களே, 1957-ல் பல பெரிய பஞ்சாயத்துக்களின் நிர்வாகத்தை சீர்செய்யும் வகையில் அவைகளில் சிலவற்றை முனிஸிபாலிட்டிகளாக மாற்றுவது என்று முடிவு செய்யப்பட்டு அந்த அடிப்படையில் கெஜட்டிலும் நோட்டிபிகேஷன் செய்யப்பட்டது. அப்படி விளம்பரம் செய்யப்பட்டதில் நெல்லிக்குப்பம் பஞ்சாயத்தும் சேர்க்கப்பட்டிருந்தது. அப்படி விளம்பரம் செய்யப்பட்டு நெல்லிக்குப்பம் இன்னும் முனிஸிபாலிட்டியாக ஆக்கப்படவில்லை. அதன் காரணம் என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

கனம் திரு. சே. ம. அ. மஜீத்: தற்போது தாம்பரம், அல்லி நகரம், கோயில்பட்டி, தர்மபுரி முதலியவைகளைப்பற்றி ஏற்கனவே பரிசீலிக்கப்பட்டு முடிவு எடுக்கப்படவிருக்கிறது. மற்றவைகள் பரிசீலனையில் இருக்கின்றன.